15 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

| | | |
|---|---|---|
| ක්‍රිස්තියානි ධර්මය | I, II | පැය තුනයි |
| கிறிஸ்தவம் | I, II | மூன்று மணித்தியாலம் |
| Christianity | I, II | Three hours |

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## கிறிஸ்தவம் I

அறிவுறுத்தல்கள் :

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

**1.** 'விசுவாசத்தின் தந்தை' என திருமறையில் குறிப்பிடப்படுபவர் யார்?
(1) மோசே (2) ஆபிரகாம் (3) எலியா (4) தாவீது

**2.** இனம், மதம், குலம் என்பவற்றைக் கருதாது தேவைகளின் மத்தியில் இருக்கும் ஒருவருக்கு உதவுதல் பற்றிய முக்கியத்துவத்தைக் குறிப்பிடும் உவமைக் கதை எது?
(1) பரிசேயரும் வரிதண்டுபவரும் (2) காணாமற்போன ஆடு
(3) நல்ல சமாரியர் (4) காணாமற்போன மகன்

**3.** தொழுநோயாளர் பத்துப்பேர் குணமடைந்த நிகழ்வின் மூலம் நாம் பெற்றுக்கொள்ளும் படிப்பினை யாது?
(1) நோய்வாய்ப்படும்போது செபம் செய்தல்
(2) எமது அனைத்து தேவைகளையும் இறைவேண்டுதலின் மூலம் மட்டும் பெற்றுக்கொள்ளல்
(3) இறைவேண்டுதலின் மூலம் மட்டுமே சுகம் பெறலாம் என்பதனை நம்புதல்
(4) எமது தேவைகளும் குணமடைதலும் நிறைவுறும்போது கடவுளுக்கு நன்றி கூறுதலின் முக்கியத்துவம்

**4.** ஒருவர் இறைவனுக்குரியவர் என்று ஏற்றுக்கொள்ளப்படுதலுக்கு யூத மக்கள் கடைப்பிடித்த பாரம்பரியம்
(1) விருத்த சேதனம் (2) அர்ப்பணித்தல்
(3) திருமுழுக்கு (4) பன்னிரு வயதில் தேவாலயம் கொண்டுசெல்லல்

**5.** மெசியாவின் வருகையை முன்னறிவிப்பதற்கென கடவுள் யார் மூலமாகச் செயற்பட்டார்?
(1) அரசர்கள் (2) இறைவாக்கினர் (3) குருமார் (4) லேவியர்

**6.** திருமுழுக்கு யோவானின் பிறப்பு பற்றி, அவரின் பெற்றோர் அறிந்து கொண்டது யாது?
(1) விட்டுவிடாதிருத்தல்
(2) அயலவருக்குச் செவிசாய்த்தல்
(3) இறைவனால் செய்யமுடியாதது எதுவுமில்லை என்பது
(4) மிக எளிய வாழ்வை மேற்கொள்ளல்

**7.** சிமியோனின் கீதத்திலிருந்து நாம் அறிந்துகொள்வது
(1) யூதர் அனைவரின் மகிமை மெசியாவின் மூலமே என்பதனையாகும்.
(2) மெசியாவின் பிறப்பிற்கு பெரியோர் பலர் உதவினர் என்பதனையாகும்.
(3) பாரம்பரியச் சடங்குகள் முறையாகக் கடைப்பிடிக்கப்படுதல் முக்கியமானது என்பதனையாகும்.
(4) மெசியா அளிக்கும் விடுதலை ஒரு விசேட குழுவினருக்கு மட்டும் உரியதல்ல என்பதனையாகும்.

[பக். 2 ஐப் பார்க்க

8. இரு புறாக்களை மரியா பலிசெலுத்தியதின் மூலம், அவரின் பின்னணியைப் பற்றி நாம் அறிந்து கொள்வதென்ன?
(1) அவர் யூத சடங்குகளைக் கடைபிடிப்பவர் என்பதன்னையாகும்.
(2) அவர் ஓர் ஏழைப்பெண் என்பதனையாகும்.
(3) தன் மகனை மீட்டுக்கொள்வதற்கென அவர் முயற்சித்தார் என்பதனையாகும்.
(4) மேலே (1), (2), (3) ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள சகல பண்புகளையும் அவர் கொண்டிருந்தார் என்பதனையாகும்.

9. திருமுழுக்கு யோவான் முன்வைத்த, ஏரோது அரசன் செய்த பாவமாகக் குறிப்பிடப்படுவது யாது?
(1) எகிப்தை ஆக்கிரமித்தமை
(2) தனது சகோதரனின் மனைவியைத் திருமணம் செய்தமை
(3) பத்சீபாவை திருமணம் செய்தமை
(4) பிறவினப் பெண்ணைத் திருமணம் செய்தமை

10. நாசரேத்து அறிக்கையில் காணப்படும் இறையரசு பற்றிய முக்கிய குணாதிசயம்
(1) நீதியும் நேர்மையும்
(2) குணப்படுத்தலும் பராமரித்தலும்
(3) நேர்மையும் கருணையும்
(4) நீதியும் குணப்படுத்தலும்

11. இரத்தப்போக்குடைய பெண் சுகம்பெற்ற சம்பவத்தின் மூலம் எமக்குக் கற்பிக்கப்படும் பிரயோக பாடம் என்ன?
(1) சாதாரண நோயாளர் மத்தியில் பணிபுரிதல்
(2) சமுதாய வடுக்களையுடைய நோயாளர் மத்தியில் பணிபுரிதல்
(3) தொற்று நோயாளர் மத்தியில் பணிபுரிதல்
(4) நீண்டகால நோய்களைக் கொண்டோர் மத்தியில் பணிபுரிதல்

12. பின்வருவனவற்றுள் யூத சமயத் தலைவர்கள் இயேசுவின் போதனைகளுக்கு எதிர்ப்புத் தெரிவித்தமைக்கான காரணங்கள் யாவை?
A - அவர் நீதி, நேர்மை என்பவற்றின் அடிப்படையில் சட்டத்தை விளக்கியமை
B - இயேசுவானவர் தேவாலயத் தலைவர்கள் மத்தியில் பிரபல்யமடைந்தமை
C - இயேசுவானவர் யூத தலைமைத்துவத்தைச் சேராதவராகக் காணப்பட்டமை
D - அரசியல் இலாபங்களைப் பெற்றுக்கொள்வதற்கான அவர்களின் முயற்சியை வெளிப்படுத்தியமை
(1) A யும் B யும் (2) A யும் D யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

13. இயேசுவானவர் சிலுவையில் அறையப்படுவதற்கான குற்றவாளியென தீர்ப்பிடப்பட்டமையை இன்றைய சமுதாயமும் உலக அமைப்புக்களும் பிரதிபலிப்பது
(1) குற்றமற்றவர்கள் குற்றவாளிகளாகத் தீர்க்கப்படுகின்றமையை ஆகும்.
(2) குற்றவாளிகள் விடுதலை செய்யப்படுகின்றமையை ஆகும்.
(3) அநீதியின் மூலம் குற்றவாளிகள் தப்பித்து விடுகின்றமையை ஆகும்.
(4) குற்றம்புரியாத அப்பாவிகள் குற்றவாளிகளெனத் தீர்க்கப்படுதலையும் குற்றவாளிகள் விடுதலை பெறுகின்றமையையும் ஆகும்.

14. சேரிவாழ் மக்களின் மத்தியில் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முற்பட்டவர்
(1) அருட்தந்தை சந்திரா பர்னாந்து
(2) அருட்தந்தை திஸ்ஸ பாலசூரிய
(3) அருட்தந்தை மைக்கல் ரொட்ரிகோ
(4) அருட்தந்தை பீட்டர் ஜெராட் டி சில்வா

15. இயேசுவானவரை மெசியாவாக ஏற்றுக்கொள்வதில் யூதர்களுக்குத் தடையாக அமைந்தது, அவர்
(1) இறைவாக்கினராகக் கருதப்பட்டமையாகும்.
(2) மாட்டுத் தொழுவத்தில் பிறந்தமையாகும்.
(3) அரசரென இனங்காணப்பட்டமையாகும்.
(4) கன்னிப் பெண்ணொருவரின் மூலம் பிறந்தமையாகும்.

16. பின்வருவனவற்றுள் மரியா, எலிசபெத்து ஆகியோரின் குணாதிசயங்களின் மூலம் கடவுள் நமக்கு வெளிப்படுத்தும் படிப்பினைகள் யாவை?
A - வயதும் காலமும் இறை திட்டத்திற்குத் தடையல்ல.
B - இறைதிட்டம் வயதில் முதிந்தவர் மூலமாக வெளிப்படுத்தப்படும்.
C - இறைத்திட்டம் எப்போதும் தேவதூதர் மூலமாகவே அறிவிக்கப்படும்.
D - இறைத்திட்டத்தை செயற்படுத்துவதில், கடவுள், மனிதனை சேர்த்துக் கொள்கின்றார்.
(1) A யும் C யும் (2) A யும் D யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

[பக். 3 ஐப் பார்க்க

17. இறையரசின் பிரசை என்ற ரீதியில் நீர் எவ்வாறு தலைமைத்துவத்தை நடைமுறைப்படுத்த வேண்டும்?
(1) பணி செய்யப்படுதலை எதிர்பார்க்காது பிறருக்குப் பணி செய்தலாகும்.
(2) தனக்கெனப் பணியாற்றும் அதேவேளையில் பிறருக்கும் பணி செய்தலாகும்.
(3) பிறரும் எமக்குப் பணிசெய்வர் என்ற எதிர்பார்ப்புடன் பணி செய்தலாகும்.
(4) வேறு தலைவர்களுக்கு பணிபுரிவதுடன், தாமும் நலன்களைப் பெற்றுக்கொள்வதாகும்.

18. அபிசேகம் பெற்ற அரசன் ஆட்சிசெய்ய வேண்டியது,
(1) செல்வந்தருக்கு அன்புடனும் நீதியுடனும் கடமையைச் செய்வதன் மூலாகும்.
(2) அன்பு, நீதி, நேர்மை என்பவற்றினால் ஆட்சி நடத்துவதன் மூலமாகும்.
(3) தனது நண்பர்களுக்கென அன்புடனும் நீதியுடனும் ஆட்சி செய்வதன் மூலமாகும்.
(4) தனது குடும்பத்திற்கென அன்பையும் நீதியையும் நிலைநாட்டுவதன் மூலமாகும்.

19. மெசியாவிடமிருந்து நாம் பெற்றுக்கொள்வது,
(1) நிறை வாழ்வாகும்.
(2) செழிப்புமிகு வாழ்வாகும்.
(3) சுகமும் நலனும் நிறைந்த வாழ்வாகும்.
(4) அபலவருடனான வாழ்வாகும்.

20. பாடசாலை மாணவர் மத்தியில் நீங்கள் ஒரு நல்ல சமாரியனாக எவ்வாறு செயற்படுவீர்கள்?
(1) பாடசாலை அதிபர் உங்களைப் பற்றி அறிந்துகொள்ளும் விதத்தில் செயற்படுதலாகும்.
(2) நீங்கள் தலைவராக இருக்கும் வகையில் செயற்படுதலாகும்.
(3) பிறர் உங்களை மதிப்புடன் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் நடந்துகொள்ளலாகும்.
(4) எவரும் விடுபடாத விதத்தில், அனைவரையும் பாதுகாத்தல் மூலமாகும்.

21. எதுவித வருமானமும் இன்றி வாழ்க்கைப் போராட்டத்தை எதிர்கொள்ளும் ஒருவருக்கு அன்பு செய்வதற்கான சிறந்த செயன்முறை
(1) தமது சொந்தப் பணத்தினால் அவருக்கு உதவிசெய்தல்
(2) சமுதாய நலன்புரி அமைப்பொன்றுடன் இணைந்துகொள்ள உதவுதல்
(3) வருமானத்தை உருவாக்கிகொள்ள ஒரு சிறந்த வழியை அமைத்துக் கொடுத்தல்
(4) நண்பர்களிடத்தில் அவரின் நிலையை எடுத்துக்கூறுதல்

22. நிலையற்ற வாழ்வை எதிர்நோக்கும் மக்கள் மத்தியில் ஒரு கிறிஸ்தவனின் பொறுப்புமிகு செயலாக அமைய வேண்டியது
(1) நம்பிக்கையை ஏற்படுத்திக்கொள்ளத் தூண்டுதல்
(2) அவநம்பிக்கையை விருத்திசெய்து கொள்ளத் தூண்டுதல்
(3) தடையற்ற கொள்கையைக் கடைப்பிடித்தல்
(4) அரசியல் பாதுகாப்பைப் பெற்றுக்கொள்வதற்கு உதவுதல்

23. 'சபை' என்பதன் மூலம் நீர் விளங்கிக்கொள்வது என்ன?
(1) சபைகளின் ஒருங்கிணைப்பாகும்.
(2) சபைகளின் மன்றமாகும்.
(3) கிறிஸ்துவின் உடலாகும்.
(4) குருக்களின் ஒன்றுகூடலாகும்.

24. பின்வருவனவற்றுள் ஒடுக்கப்பட்டவர்களுக்கும் சமுதாயத்தினால் ஒதுக்கப்பட்டவர்களுக்குமாக கிறிஸ்தவர்கள் என்ற வகையில் எடுக்கத்தக்க நடவடிக்கைகள் யாவை?
A - நீதிபெறுதலுக்கான உதவி நிலையங்களை ஆரம்பித்தல்
B - அவர்களின் தேவைகளை நிறைவு செய்வதற்கு பல்சமய ஒருங்கிணைப்பொன்றை உருவாக்குதல்
C - ஆலயங்கள் அமைத்தல்
D - அவர்களை இகழும் குழுக்களை உருவாக்குதல்
(1) A யும் B யும்
(2) A யும் C யும்
(3) A யும் D யும்
(4) B யும் D யும்

25. இயேசுவானவர் "இவரும் ஆபிரகாமின் மகனே!. இவளும் ஆபிரகாமின் மகளே" என பின்வரும் யாவரைப் பற்றிக் கூறினார்?
(1) யோசேப்பு, மரியா
(2) சீமோன், அன்னா
(3) சக்கேயு, உடல் ஊனமுற்ற பெண்
(4) பரிசேயர், பாவியான பெண்

[பக். 4 ஐப் பார்க்க

26. பின்வருவனவற்றுள் பிற இனத்தவர் மத்தியில் மறைப்பணி செய்வதற்கு பவுலுக்கு உதவிய பின்னணிகள் யாவை?
A - வியாபார மத்திய நிலையமாகிய தர்சு நகரில் பிறந்தமை
B - சினகோக் செபாலயங்களில் பெற்ற அறிவு
C - யூத சட்டம் பற்றிய அறிவு
D - தர்சு நகரின் பல் இன, மொழி, கலாசாரம் என்பவற்றின் செல்வாக்கு
(1) A யும் B யும் (2) A யும் D யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

27. நிக்கதேமு இராக்காலத்தில் இயேசுவானவரைச் சந்திக்கச் சென்றது,
(1) தனது பிற பரிசேயர் குழு பற்றிய பயத்தினாலாகும்.
(2) ஆன்மீக வினாக்களுக்கு விடை தேடுவதற்காகும்.
(3) இயேசுவானவர் கடவுளிடமிருந்தா ஆபிரகாமிடமிருந்தா வந்தார் என்பதனை அறிந்து கொள்வதற்காகும்.
(4) ஓர் ஆசிரியர் என்ற முறையில் தனது கற்பித்தலுக்கு உதவி பெற்றுக்கொள்வதற்காகும்.

28. துன்புறும் பணியாளின் முன்மாதிரியைப் பின்பற்றும் கிறிஸ்தவர்கள் நாம் செய்ய வேண்டியது,
(1) நமது சுய வாழ்வைப் பேணும் பணியில் ஈடுபடுதல் ஆகும்.
(2) துன்புறுதல், தியாகம் என்பவற்றை பிறரிடம் எதிர்பார்த்தல் ஆகும்.
(3) உலகிலிருந்து வரும் துன்பங்கள், சிரமங்கள் என்பவற்றைத் தவிர்க்கும் விதத்தில் செயற்படல் ஆகும்.
(4) துன்பங்கள், துயரங்களுக்கு மத்தியில் விசுவாசத்துடனும் தைரியத்துடனும் செயற்படல் ஆகும்.

29. "உயிரோடு இருப்பவரைக் கல்லறையில் தேடுவதேன்?" என்ற கூற்றிலிருந்து கிறிஸ்தவர்களான நாம் பெற்றுக்கொள்ளும் செய்தி,
(1) கல்லறைக்குச் சென்ற பெண்களைப்போல், நாமும் வாரத்தின் முதலாம் நாளில் ஆலயம் செல்லல் வேண்டும்.
(2) இயேசுவானவர் நம் மத்தியில் வாழ்கின்றார் என்பதை விசுவாசித்தல் வேண்டும்.
(3) தேவதூதர்கள் அடிக்கடி இவ்வாறு செய்திகளைக் கொண்டுவருவர் என்பதை உணர்தல் வேண்டும்.
(4) கல்லறையைப்போன்று நமது உள்ளங்களும் வெறுமையானவை என்பதனை உணர்ந்துகொள்ள வேண்டும்.

30. பின்வருவனவற்றுள் கெத்சமனே தோட்டத்தில் இயேசுவானவரின் செபம் **அல்லாதது** எது?
(1) "உங்களுக்காக வழங்கப்படும் எனது உடலாகும்."
(2) "எனது விருப்பப்படியல்ல; உம் விருப்பப்படியே நிகழட்டும்."
(3) "இத்துன்பக் கிண்ணத்தை என்னிடமிருந்து அகற்றும்."
(4) "சோதனைக்கு உட்படாதிருக்க இறைவனிடம் வேண்டுங்கள்."

31. 'கிறிஸ்தவர்' என்ற பெயர் முதன்முதலில் வழங்கப்பட்டது,
(1) எருசலேம் தேவாலயத்திலாகும். (2) நாசரேத்து செபாலயத்திலாகும்.
(3) சிரியாவின் அந்தியோக்கியாவிலாகும். (4) சிலிசியாவின் தர்சுவிலாகும்.

32. பின்வரும் அட்டவணையைக் கருதுக.

| இயேசுவானவர் சந்தித்த சோதனை | தற்கால சமுதாயத்தில் ஏற்படும் அவ்வாறான சோதனைகள் | கிறிஸ்தவர்களின், சோதனைகளை வெற்றிகொள்வதற்கான பிரதிச் செயல்கள் |
|---|---|---|
| நீர் என்னை வணங்கினால் உலகில் உள்ள அனைத்தின் மேலும் முழு அதிகாரத்தை உமக்குக் கொடுப்பேன் | செல்வம், அதிகாரம், புகழ் என்பவற்றை நாடிச் செயற்படுதல் | A - சோதனைகள் இறைசித்தமே என ஏற்றுக்கொள்ளல்<br>B - செல்வம், அதிகாரம் என்பவற்றில் வெற்றி பெறுதல்<br>C - செபத்தின் மூலம் இறை சித்தத்தை ஏற்றுக்கொள்ளல்<br>D - இறைவார்த்தையின் மூலம் சோதனையை வெற்றி கொள்ளல் |

இவற்றுள் மிகச்சரியான கிறிஸ்தவ பிரதிச் செயல்களைக் கொண்ட தெரிவு யாது?
(1) A யும் B யும் (2) B யும் C யும் (3) B யும் D யும் (4) C யும் D யும்

33. கிறிஸ்தவ மாணவன் என்ற வகையில், பாடசாலையில் உமது மிக முக்கிய பொறுப்பாக அமைய வேண்டியது,
(1) கிறிஸ்தவ சமயத்தின் சிறப்புக்களைப் பற்றிக் கூறுதலாகும்.
(2) கிறிஸ்தவ கொள்கைகள், பெறுமதிகளுக்கேற்ப சாட்சிபகருதலாகும்.
(3) தனது திறமைகளை அதியுச்ச மட்டத்தில் விருத்தி செய்து கொள்ளலாகும்.
(4) ஏனைய மாணவர்களின் செயற்பாடுகளைப் பற்றி விமர்சனரீதியாக ஆராய்தலாகும்.

[பக். 5 ஐப் பார்க்க

34. ஆமோஸ், மீக்கா ஆகிய இறைவாக்கினர்களின் செயல்களின் மூலம் தற்காலத்தில் நாம் பெற்றுக்கொள்ளும் தூண்டுதல்களைத் தெரிவுசெய்க.

A - மக்கள் மத்தியில் மரபுகளை வளர்த்தல்
B - சமுதாய நீதிக்காகச் சிறப்புடன் செயற்படுதல்
C - ஞாயிறு தினங்களில் தூய வாழ்வு வாழ்வதன் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துதல்
D - சமாதானத்திற்காக அர்ப்பணிப்புடன் செயற்படுவதன் முக்கியத்துவம்

(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

35. "மனிதர்களே, ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்? நாங்களும் உங்களைப் போன்ற மனிதர்கள்தாம்." பவுலும் பர்னபாவும் இவ்வாறு கூறியதிலிருந்து, நாம் பின்பற்ற வேண்டியது,

(1) கடவுளுக்குரிய மகிமையை நாம் நமக்கல்ல, அவருக்கே வழங்க வேண்டும் என்பதனையாகும்.
(2) பலிசெலுத்துவதிலிருந்து நாம் விலகியிருத்தல் வேண்டும் என்பதனையாகும்.
(3) அற்புதங்கள் செய்வதன் விளைவுகளை உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதனையாகும்.
(4) இயேசுவானவர் தொடர்பாக விளக்கமில்லாமல் செய்யும் செயல்களை அனுமதிக்கக்கூடாது என்பதனையாகும்.

36. "இயேசுவானவருக்காக எதிர்பாராத வேளையில், எதிர்பாராத இரக்கச் செயலில் ஈடுபட அழைக்கப்படுதல்" என்பதனை எடுத்துக்காட்டுவது,

(1) சக்கேயு தனது செல்வத்தைப் பகிர்ந்து கொண்டமையாகும்.
(2) அரிமத்தியா யோசேப்பின் செயற்பாட்டையாகும்.
(3) சிரேன் ஊரின் சீமோன் பெற்ற அழுத்தத்தின் மூலம் அவன் செயற்பட்ட விதத்தையாகும்.
(4) எருசலேமின் பெண்கள் சிலுவைக்கு அருகில் தரித்திருந்தமையையாகும்.

37. கிறிஸ்தவர்களான நாம் உண்மையான திராட்சைச் செடியாகிய இயேசுவுடன் இணைந்திருக்க வேண்டியது,

(1) பல்கலாசார சமுதாயத்தில் நல்ல விளைவுகளை வழங்கி ஐக்கியத்தை ஏற்படுத்துவதற்காகும்.
(2) செழிப்பானதொரு வாழ்வுக்கான வழியை ஏற்படுத்திக் கொள்வதற்காகும்.
(3) முதல் திருச்சபையின் கற்பித்தலுக்கமைய எமது வாழ்வை அமைத்துக்கொள்வதற்காகும்.
(4) இலங்கைச் சமுதாயத்தின் பெறுமதிகளைச் சேகரிப்பதற்காகும்.

38. பின்வருவனவற்றுள் நல்ல மேய்ப்பர்களாக இன்றைய கிறிஸ்தவ சமயத் தலைவர்களிடமிருந்து நாம் எதிர்பார்ப்பன யாவை?

A - வீடுகளை இழந்தோருக்கு வீடுகளை அமைத்துக் கொடுத்தல்
B - இறைவார்த்தையின் உண்மையை விளக்கி திருச்சபையைப் போசித்தல்
C - சபையிலிருந்து விலகிச் சென்று காணாமற்போனவர்களை மீளவும் அழைத்து வருதல்
D - சபையின் அங்கத்துவத்தை முடியுமானவரை பெருக்குதல்

(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) B யும் D யும்

39. 'ஆழமாகத் தோண்டி பாறையின் மீது அடித்தளம் அமைத்தல்' என்னும் திருமறை வார்த்தை எமக்குத் தரும் படிப்பினையாவது,

(1) வீடொன்றைக் கட்டும்போது அடித்தளம் முறையாக அமைக்கப்படுதலின் முக்கியத்துவமாகும்.
(2) நிலத்தை ஆழமாகத் தோண்டுவதன் மூலம் கட்டடம் உறுதியாக அமையும் என்பதாகும்.
(3) கிறிஸ்தவர்களின் வாழ்க்கை இயேசு என்னும் பாறையின் மீது கட்டப்படுதல் முக்கியமானது என்பதாகும்.
(4) ஒரு வியாபாரத்தையோ நிறுவனத்தையோ ஆரம்பிக்கும்போது அதன் அடித்தளத்தை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும் என்பதாகும்.

40. பேதுருவும் யோவானும் யூத தலைமைச் சங்கத்தார் முன்னிலையில் "உங்களுக்குச் செவிசாய்ப்பதா? கடவுளுக்குச் செவிசாய்ப்பதா?" எனக் கூறியதிலிருந்து கிறிஸ்தவர்களாகிய நாம் கற்றுக்கொள்வது,

(1) உரிய வேளையில் பயமின்றி நமது பலத்தையும் திறனையும் காட்டுவதற்கான சந்தர்ப்பத்தைப் பெற்றுக்கொள்ளலையாகும்.
(2) எமது அறிவை உபயோகித்து சந்தர்ப்பத்துகேற்ப பேசுதலையாகும்.
(3) மக்களுக்கும் தலைவர்களுக்கும் முன்னிலையில் வெற்றி பெறுதலின் முக்கியத்துவத்தையாகும்.
(4) சவால்மிகு வேளைகளில் தூய ஆவியானவரின் வழிநடத்துதலிலிருந்து விலகாமல் முன்வருதலையாகும்.

**

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

15 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

ක්‍රිස්තියානි ධර්මය I, II
கிறிஸ்தவம் I, II
Christianity I, II

## கிறிஸ்தவம் II

※ **முதலாம்** வினாவிற்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

1. (i) சிறப்புமிகு பிறப்புகள் பற்றி வானதூதர்களின் செய்திகளுக்குக் கீழ்ப்படிந்து நல்ல பிரதிச் செயல்களை மேற்கொண்ட **இருவரின்** பெயர்களைத் தருக.

(ii) (அ) மலாக்கி இறைவாக்கினரின் இறைவாக்கின்படி, மெசியாவின் வருகைக்கு முன்சென்று வழியை ஆயத்தம் செய்தவர் யார்?

(ஆ) இதன் மூலம் அவர் மக்களுக்கு விடுக்கும் சவால் யாது?

(iii) (அ) பரிசேயரின் மத்திய நிலையமாக அமைந்தது எது?

(ஆ) இயேசுவானவர் பரிசேயர்களுக்கு எதிராக முன்வைத்த ஒரு குற்றச்சாட்டை எழுதுக.

(iv) இயேசுவானவர் சிலுவையில் அறையப்பட்ட வேளையில் கூறிய வாக்கியங்கள் **இரண்டை**, லூக்கா நற்செய்தியை அடிப்படையாகக் கொண்டு முன்வைக்குக.

(v) இயேசுவானவர் திருமுழுக்கு பெற்ற வேளையிலும் தோற்றம் மாறிய (மறுரூப) வேளையிலும் வானத்திலிருந்து ஒலித்த பின்வரும் இறை வசனங்களை சரியாகப் பூரணப்படுத்துக.

(அ) “என் அன்பார்ந்த மகன் நீரே; ...........................................................

(அ) “இவரே என் மைந்தர்; நான் தேர்ந்து கொண்டவர் இவரே. ...........................................................

(vi) செபவாழ்வின் மூலமாக இயேசுவானவர் பெற்றுக்கொண்ட சிறப்பான பிரதிபலன்கள் **இரண்டை** எழுதுக.

(vii) ஆதிகால திருச்சபையின் செபம், மற்றும் அவர்களின் சொத்துக்களைப் பொதுவாகக் கொண்டு பகிர்ந்து கொண்டமை என்ற இரண்டு குணாதிசயங்களின் மூலமாக, கிறிஸ்தவர்களாகிய நாம் பெற்றுகொள்ளும் முன்மாதிரிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(viii) பவுல் அடிகளார் சிறைக் கைதியாகக் கொண்டுசெல்லப்பட்டபோது, புயலில் சிக்கிய வேளையிலும்கூட சிறைக்கைதிகளைப் பலப்படுத்தியும் கப்பல் மாலுமிகளுக்கு அறிவுறுத்தல் விடுத்தலின் மூலமும் நம்பிக்கைக்குச் சான்று பகர்ந்தார். அச்செயல்களை அடிப்படையாகக் கொண்டு அவரிடமிருந்து நாம் பெற்றுக்கொள்ளும் வழிகாட்டல்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ix) அன்பின் கீதத்தில் (வழிகள்) பவுல் கூறும் பின்வரும் வசனத்திலுள்ள இடைவெளிகளுக்குச் சரியான சொற்களை இட்டுப் பூரணப்படுத்துக.

“............................ எனக்கில்லையேல், ஒலிக்கும் ................................ போலாவேன்.”

(x) உலக ரீதியான ஏழ்மைத் தனத்திற்கும் ஆன்மீகரீதியான ஏழ்மைத் தனத்திற்கும் ஏதுவான **ஒவ்வொரு** காரணத்தைக் குறிப்பிடுக.

2. மரியாவோ நல்ல பங்கைத் தேர்ந்தெடுத்துக்கொண்டாள்; அது அவளிடமிருந்து எடுக்கப்படாது.

(i) இங்கு தடித்த எழுத்துக்களில் தரப்பட்டுள்ளவற்றின் மூலம் நாம் பெற்றுக்கொள்ளும் செய்தியை எழுதுக.

(ii) மேற்குறிப்பிட்ட கூற்றிலிருந்து, இயேசுவின் செயற்பாட்டின் அடிப்படையில், அவரின் சீடராதல் என்பதன் மூலம் கருதப்படுவது என்ன? **மூன்று** காரணங்களை முன்வைக்குக.

(iii) இயேசுவானவர் வெவ்வேறு வேளைகளில் செயற்பட்ட விதங்களை அடிப்படையாகக் கொண்டு, இன்றைய சமூகத்தில் பெண்களுக்கு சமமான உரிமைகள் வழங்கப்பட வேண்டியதன் முக்கியத்துவத்திற்கான நமது பங்களிப்பு எவ்வாறு அமைய வேண்டும் என்பதனை **ஐந்து** விடயங்களினூடாக விளக்குக.

3. (i) இயேசுவானவரின் திருப்பணியின் முக்கிய கருப்பொருள் யாது? இதனை முன்வைப்பதற்கு அவர் பயன்படுத்திய வழிமுறையொன்றை எழுதுக.

(ii) இக்கருப்பொருளை மக்கள் மத்தியில் கொண்டு செல்வதற்கென அவர் கைக்கொண்ட **மூன்று** பெறுமதிகளை உதாரணங்களுடன் குறிப்பிடுக.

(iii) இயேசுவின் படிப்பினைகளைப் பயன்படுத்தி இன்றைய சமுதாயத்தில் இக்கருப்பொருளை எவ்வாறு அறிமுகப்படுத்தலாம் என்பதனை **ஐந்து** குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு விளக்குக.

4. "நரிகளுக்கு பதுங்குகுழிகளும் வானத்துப் பறவைகளுக்கு கூடுகளும் உண்டு. ஆனால் மானிடனுக்கோ தலைசாய்க்கக்கூட இடமில்லை."

(i) தம்மைப் பின்பற்ற விரும்பியவர்களுக்கு இயேசுவானவர் முன்வைத்த இக்கூற்றுக்கமைய ஏற்படும் **இரண்டு** சவால்களைக் குறிப்பிடுக.

(ii) அழைக்கப்பட்டவர்களும் சுயமாகவே இயேசுவின் சீடராக விரும்பியவர்களும் வழங்கிய **மூன்று** பதில்களைக் குறிப்பிடுக.

(iii) மேலே (ii) இல் குறிப்பிட்ட பதில்களின்படி, இன்றைய சமுதாயத்தில் வாழும் கிறிஸ்தவர்கள் இயேசுவானவரின் அழைப்பு எதற்காகவெனப் புரிந்துகொண்டு, அதற்கு எவ்வாறான பிரதிச் செயல்களில் ஈடுபடவேண்டும் என்பதனை **ஐந்து** காரணங்களை அடிப்படையாகக் கொண்டு விளக்குக.

5. (i) மனிதர் ஆணாகவும் பெண்ணாகவும் கடவுளால் உருவாக்கப்பட்டனர் என்பதனைப் புரிந்துகொண்டு, 21 ஆம் நூற்றாண்டில் வாழ்கின்ற ஒருவராக, உமது புரிந்துணர்வின் அடிப்படையில் **இரண்டு** சிந்தனைகளை முன்வைக்குக.

(ii) அந்த புரிந்துணர்வின்படி கணவனுக்கும் மனைவிக்குமிடையில் இருக்கவேண்டிய இருதரப்புக் கடமைகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(iii) தற்கால சமூகத்தில் குடும்பங்கள் எதிர்கொள்ளும் சவால்மிக்க பிரச்சினைகளைக் கருத்திற்கொண்டு, கிறிஸ்தவ விழுமியங்களின் அடிப்படையில் எவ்வாறு செயற்படலாம் என்பதனை, பின்வரும் குடும்ப / சமூக உறவுகளின் அடிப்படையில் விவரிக்குக.

(அ) கணவன், மனைவிக்கிடையில்
(ஆ) பெற்றோர் பிள்ளைகளுக்கிடையில்
(இ) பிள்ளைகள், முதியோருக்கிடையில்
(ஈ) சகோதரர்களுக்கிடையில்
(உ) குடும்பத்துக்கும் சமூகத்துக்குமிடையில்

6. (i) பவுல் அடிகளாரின் முதலாவது, இரண்டாவது மற்றும் மூன்றாவது மறைபரப்புப் பயணங்களின் நோக்கங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) ஒவ்வொரு பயணத்திலும் தமது நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்வதற்கென அவர் மேற்கொண்ட ஒவ்வொரு செயன்முறையை உதாரணங்களுடன் குறிப்பிடுக.

(iii) மேற்குறிப்பிட்ட வழிமுறைகளை உபயோகித்து, தற்கால கிறிஸ்தவ தூதுப் பணியில் ஈடுபடுவோர் அர்த்தமுள்ள விதத்தில் அச்சந்தர்ப்பங்களைப் பயன்படுத்தக்கூடிய விதத்தை **ஐந்து** விடயங்களினூடாக விளக்குக.

7. பின்வரும் தலைப்புகளில் எவையேனும் **இரண்டினைத்** தெரிவுசெய்து, சிறுகுறிப்பெழுதுக. தரப்பட்டுள்ள வழிகாட்டற் குறிப்புகளை அடிப்படையாகக் கொள்க.

(i) மெசியா கோட்பாடு / சிந்தனை
- இது எந்த இறைவாக்கினர்கள் உரைத்த கோட்பாடு?
- இக்கோட்பாட்டை முன்வைப்பதற்குத் தடையாக இருந்த யூத சமயப் பின்னணி
- இக்கோட்பாடு சமுதாயத்தில் ஏற்படுத்திய எதிர்பார்ப்பு
- இன்று மெசியாவின் மூலம் கிடைக்கும் ஒளி

(ii) ஆயத்துவ (மேய்ப்பு) தலைமைத்துவம்
- முன்வைப்பதற்குக் காரணமாக அமைந்த விடயங்கள்
- இது பற்றி திருமறையில் காணப்படும் சிந்தனைகள்
- இச்சிந்தனைகளை நல்ல மேய்ப்பரான இயேசு பயன்படுத்திய விதம்
- இதனை எவ்வாறு அவர் தம்வாழ்வில் எடுத்துக்காட்டினார்?
- சமுதாயத்தில் இச்சிந்தனைகளை வளர்ப்பதற்கென தற்கால கிறிஸ்தவர்களான நாம் செய்யக்கூடியவை

(iii) யூத சமுதாயக் கோட்பாடு
- யூத சமுதாயம் உருவாக்கம் பெற்றதில் முன்னோடியானவர்கள்
- அவர்களின் அடிப்படைப் பண்புகள்
- மக்களை ஒரு தேசியமாக (நாடாக) கட்டியெழுப்புவதற்கு அவர்கள் வழங்கிய பங்களிப்பு
- இயேசுவானவரின் பங்களிப்பு
- கிறிஸ்தவ கண்ணோட்டத்திற்கு இயேசுவானவரின் படிப்பினைக்கூடாக பெறப்பட்ட வழிகாட்டல்

(iv) தூய ஆவியானவரின் வழிநடத்துதலின் கீழ் வாழுதல்
- ஆவியானவரின் பிரசன்னத்தை உணர்த்தும் குறியீட்டடிப்படையிலான நிகழ்வுகள்
- அவற்றின் மூலம் வெளிப்படுத்தப்பட்ட முக்கிய விடயங்கள்
- இயேசுவானவர் அந்த அடையாளங்களை உணர்த்திய விதம்
- எமது கிறிஸ்தவ வாழ்வின் மேம்பாட்டுக்காக இக்கருத்துக்களைத் தொடர்புபடுத்திக் கொள்ளும் விதம்

* * *